உ
சேஷாத்ரி சத்குருவே நம :



# திருவண்ணுமலை
# ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளின்
# சரிதம்.

---

கர்மண்யேவ அதிகாரஸ்தே மா பலேஷு கதாசந
—ஸ்ரீமத் பகவத்கீதை

கருத்துணர்ந்து கர்மாவைச்செய்
செயலிலுறும் செல்வம் சேர்க்காதே
—ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள்

தோற்றம் : 22—1—1870

விதேஹம் : 4—1—192



வெளியீடு :
ஸ்ரீ சேஷாத்ரி ஸ்வாமிகள் ஆச்ரமம்
: திருவண்ணுமலை. வ. ஆ. :

ஓம்.

ஸ்ரீ குருப்யோ நம:

# ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளின் சரிதம்.

பொன்விளையும் காஞ்சிதனில் மரகதாம்பாள் புதல்வரெனப் பொலிந்து தோன்றி
மின்விளை அண் ணாமலையில் மேவியுறை சேஷாத்ரி மேலோன் ப்ரம்மத்
தின்னிலையிற் பிறங்கிடுவோன் தன்னலமே தேராதான் தேர்ந்து மக்கள்
மன்னலமே மிகநினைந்து வந்தருள்செய் வண்மையதை வகுக்கப் போமோ!

“ஞானத் தபோதனரை வாவென் றழைக்கும் மலை அண்ணாமலை”. அண்ணாமலை என்னும் ஸ்ரீ அருணாசலம் ஞானப் பிழம்பு. பூமியின் இதயம். சிவபிரானுடைய ஆதி இலிங்கமூர்த்தி இதுவே. இம்மலையால் ஆகர்ஷிக்கப்பட்டு ஞானிகள் பலர் வாழை யடி வாழையென இடையறாது இதன்கண் வாழ்ந்து வருகின்றனர் அவர்களுள் நமக்குச் சமீப காலத்தில் விளங்கிய ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளும், பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளும் முழு உலகின ராலும் போற்றப்பட்ட ஞானச் செல்வர்களாகும். ஸ்ரீ ரமண பகவான் அருணாசலத்திற்கு வருவதற்கு 6–வருடங்களுக்கு முன் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் இங்கு பரிவிராஜகராய் வந்து சேர்ந்தனர் ஸ்ரீ சுவாமிகளின் பிறப்பு, கல்வி, சாதனை, ஸித்தியாகிய சரித்திர வரலாறு முமுக்ஷுக்களுக்கும் ஏனையோருக்கும் பெரிய ஆன்மீக உதவியாயிருத்தலின் அதனைச் சுருக்கமாய் இங்கு காண்போம்.

தொண்டை நாடு என்னும் காஞ்சி மண்டலத்தில் வட-ஆற்காடு ஜில்லா, வந்தவாசியைச் சேர்ந்த வழூரில் பௌரகுத்ஸ கோத்ரத்துதித்த அஷ்ட ஸஹஸ்ரப்ராம்மணர் சேஷாத்ரி ஜோஸ்ய ரின் குமாரர் ஸ்ரீ வரதராஜ ஜோஸ்யருக்கும் வித்வான் காமகோடி சாஸ்திரிகள் குமார்த்தி மரகதாம்பாளுக்கும் தவப்புதல்வராய் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் காஞ்சியில் (22-1-1870) சுக்கில ஹு தை மீ 11௳ சனிக்கிழமை ஹஸ்த நக்ஷத்திரம் தநுர் லக்கினத்தில் அவதரித்தனர். பாட்டனாரின் பெயரும் குலதெய்வ நாமமுமாக “சேஷாத்ரி” என்ற பெயர் சூட்டப்பட்டு அழகும், அறிவுங் கொண்டு காண்போர் உள்ளங்கவரும் இளங்குழந்தையாக ஸ்ரீ சுவாமிகள் வளர்ந்து வரலாயினர். ஐந்து ஆண்டுகட்குப் பிறகு வரதராஜ ஜோஸ்யருக்கு நரசிம்மன் என்ற இரண்டாவது குழந்தையும் பிறந்தது.

ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் இளமையில் காஞ்சிபுரம் வரதராஜப்பெருமாள் ஆலயத்திலிருந்த சாஸ்திர பாடசாலையில்

படித்துக் காவியம், நாடகம், தர்க்கம், மீமாம்ஸை, ஜோதிஷம், வேதாந்தம் முதலியவற்றில் நல்ல தேர்ச்சிபெற்றார். தன் தாயாரிடம் சங்கீதக் கலையையும் முற்றும் பயின்று தேர்ந்தார். தமிழ்ப் பண்டிதர்களான ஸ்ரீ மாசிலாமணி முதலியார், ஸ்ரீ வெங்கடாசல முதலியார் இருவரிடமும் நன்னூல், நைடதம், நாலடியார், திருக்குறள், கம்பராமாயணம் முதலிய தமிழ் நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தார். தம் பாட்டனாராகிய ஸ்ரீ காமகோடி சாஸ்திரிகளிடம் வேதாந்த சாஸ்திரமான பிரஸ்தானத்திரயத்தையும் கற்றுத் தேர்ச்சிபெற்றார்.

ஸ்ரீ சுவாமிகளின் 14-வது வயதில் தந்தை காலமாகவே காஞ்சியில் தந்தையின் சகோதரரான இராமசுவாமி ஜோஸ்யரிடம் புதல்வர்கள் இருவரும், அன்னை மரகதம்மாளும் வசித்து வந்தனர். சுவாமிகளுக்கு வயது 17 ஆனபோது மரகதம்மாள் தன் மூத்த மகனுக்கு விவாஹம் செய்துவைக்க முயன்றார். அவ்வமயம் இராமஸ்வாமிஜோஸ்யர் சுவாமிகளின் ஜாதகத்தைப் பார்த்து "சேஷாத்ரிக்கு பரிவிராஜக சந்யாசயோகம் பலமாய் இருக்கிறது! ஆகையால் மணம் செய்விக்கலாகாது!" என்று கூறி விட்டார். அன்னை வருத்தமுற்றார். அந்திய காலத்தில் அன்னை மரகதம்மாள் ஸ்ரீ சுவாமிகளை அருகில் அமர்த்திக் கொண்டு ⋆ "தர்சனாத ப்ரஸதஸி, ஜனனாத் கமலாலயே, காச்யாந்து மரணான்முக்தி; ஸ்மரணா தருணாசலே" என்ற சுலோகத்தைச் சுவாமிகளின் மார்பில் அடித்தடித்து மூன்று முறை கூறி, முடிவில் "அருணாசல, அருணாசல, அருணாசல" என்று மும்முறை உரக்கக் கூவி, மகனின்மேல் சாய்ந்தவாறே முக்தியடைந்தனள்.

இச்சம்பவம் சுவாமிகளின் மனதில் அருணாசல பக்திக் கனலை மூட்டுவித்ததுபோலும்! ஸ்ரீ அருணாசலத்தை அப்போது அவர் பார்த்ததேயில்லையாயினும் தமது கையால் ஓர் அட்டையில் 5-சிகரங்களுடைய ஒரு மலையாக அருணாசலத்தை எழுதி தன் பூஜை அறையில் வைத்துப் பூஜித்து வரலானார். அந்தப் படம் அருணாசலத்தின் பஞ்சமுகத் தோற்றத்தை ஒத்திருந்தது.

"கற்கக் கசடறக்கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்ற வேத மொழிப்படி, சகல கலைகளையும் கசடறக் கற்று ஆரி

---

⋆ இந்த சுலோகத்தின் பொருள் :-

காசியில் மரணம் முக்தி கமலால யத்தில் ஜென்ம
நாசமாம் ஜனனம்; தில்லை நடேசனைக் காணமுத்தி
தேசரு ணாசலத்தைச் சேய்மையி லொருகாலேனும்
நேசமாய் நினைப்ப ராகில் நிலைத்திடும் முத்திதானே.

பத்தில் தாராளமாகப் பேசவும், தர்க்கம் செய்யவும் வல்ல மஹா வித்வானாக விளங்கிய சுவாமிகள் "கற்றதனாலாய பயன்,......வால றிவன் நற்றாள் தொழல்" என்றுணர்ந்து, உத்தம முமுக்ஷுவாகி, முக்திக்கான சாதனங்களை அனுஷ்டிப்பதே வாழ்வில் தனது வேலை என்று கொண்டுவிட்டனர். வீட்டில் அறைக்கதவைத் தாளிட்டுக் கொண்டு காலையிலிருந்து மதியம் வரை ஜபம் செய்துவரலானார். வேளையில் சாப்பிடுவதையும் மறந்தார். உறக்கமும் அப்படியே. சிறிய தந்தை இவ்வளவு கடுமையாக ஜெபம் செய்யக்கூடாதென தடுக்கவே சுவாமிகள் கோவிலில் சென்று தமது யோகத்தைத் தொடர்ந்தனர். 17-வது வயதில் வாலை மந்திரம் சுவாமிகளுக்கு உபதேசிக்கப்பட்டது. அல்லும் பகலும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் ஆலயத்திற் கழிப்பார், மூகபஞ்ச சதியை இடைவிடாமல் கூறிக் கொண்டே தேவியை பிரதக்ஷிணம் செய்துகொண்டிருப்பார்.

கோவிலில் ஜனசந்தடியாலும், இஷ்டமித்திரர்களாலும் தொந்திரவு நேருவதைத் தவிர்க்க மயானத்திற்குச்சென்று அங்கேயே இருந்து ஜெபம் செய்துவிட்டுக் காலையில் வீட்டிற்கு வருவார். சில நாட்களில் உணவும் மறந்து மயானத்திலேயே அமர்ந்துவிடுவார். தீவிர ஜெபத்தால் தியானம் கைகூடியது. வைதிகர்களான உறவினர் சிலர் மயான ஜெபத்தை ஆக்ஷேபித்த போது தன்செயல் சரியானதே என்று சாஸ்திர ஆதாரங்களுடன் சுவாமிகள் சாதித்தார். அப்படியாயின் குடும்பிகள் வசிக்கும் வீட்டிற்குள் மயானத்திலிருந்து வரக்கூடாதென்று கூறப்பட்ட போது சுவாமிகள் 'மிக நல்லது' என்று சொல்லி அன்று முதல் வீட்டிற்கு செல்வதையும் நிறுத்தி, தீவிரமான சாதனைகளில் ஈடு படலானார்கள்.

இச்சமயம், காஞ்சிபுரம், தீர்த்தேஸ்வரர் சந்நிதியில் எழுந்தருளிய ஒரு கௌட சந்யாசி. அவதூதர், பாலாஜி சுவாமிகள் நம் ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளுக்கு ஸந்யாசதீக்ஷை யளித்தனர் சக்தி காமாக்ஷியின் தரிசனமும் ஸ்ரீ சுவாமிகளுக்கு கிடைக்கவே அன்றுமுதல் முற்றிலும் மாறுபட்ட மனிதரானார். ஊரார் "சேஷாத்திரிக்குப் பைத்தியம் பிடித்துவிட்ட" தென்று கூறலாயினர். அதனால் சித்தப்பா மறுபடியும் ஸ்ரீ சுவாமிகளுக்கு மணம் புரிவிக்க முயன்றார்; இதற்கிடையில் தந்தையின் சிரார்த்ததினத்தன்று ஸ்ரீ சுவாமிகளைப் பலவந்தமாக வீட்டுக்கிழுந்துவந்து ஓர் அறையில் பூட்டிவைத்தனர். பிறகு திறந்து பார்த்தபோது சுவாமிகள் அங்கில்லை; மறைந்தே போய்விட்டார்!! ஒரு மாத காலத்திற்குப் பின் காவேரிப்பாக்கத்தில் காணப்பட்ட சுவாமிகள் பிறகு திருப்பத்தூர் சென்று, ஜவ்வாதுமலை வழியாக கி. பி.

1890-ம் ஆண்டு ஸ்ரீ அருணாசல க்ஷேத்திரம் வந்தடைந்தனர். உறவினர் பலர் வந்து முறையிட்டு அழுது, வருந்தி அழைத்தும் சுவாமிகள் இணங்காமல், அன்று முதல் 39-வருடங்கள் இந்த க்ஷேத்திரத்தை விட்டு ஒரு நாளும் விலகாமல் வதியலாயினர்.

ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளது ப்ரஹ்மவர்ய நிலை அதியற்புதமானது. சர்வஜ்ஞராயினும் ஒன்றுமறியாத பித்தர்போலும், பேயர்போலும், குழந்தை போலும் வீதிகளில் திரிவார். பிறர் மனமறியும் சக்தியும், தூரதேசங்களில் நடப்பன அறிதலும், முக்கால நிகழ்வுகளையும் உணர்ந்து உரையாடும் பேரறிவும், உத்தமர்களுக்கு அவரவர் அபீஷ்டங்களை நல்கும் தவத்திறனும், துஷ்டர்களை நிக்ரஹிக்கும் ஆற்றலும் இன்னும் இயம்புதற்கரிய அஷ்டமா சித்திகளையும் கைவரப்பெற்ற மஹா சித்த புருஷராய் விளங்கினர். அவை யாவையும் உதாரணத்துடன் விளக்கிற்பெருகும். பொதுவாக (பாபிகளை) ஸ்ரீ சுவாமிகள் அண்டவிடுவதில்லை. பாபிகளின் மறைமுகமான பாவங்களை எல்லாம் வெட்டவெளிச்சமாய் அம்பலப்படுத்தித் திட்டி விரட்டிவிடுவார். செல்வரோ, ஏழையோ, ஆணோ, பெண்ணோ, குழந்தைகளோ, பண்டிதர்களோ யாராயினும் அவருக்கு ஒன்றே. எதிலும் பற்றற்று, அச்சமற்று, ஜாதி, மத, ஆசிரம, ஆசார, சுத்த, சுகதுக்க த்வந்த பேதமற்று, எந்த நியமுமற்ற, சுத்த அதிவர்ண விளங்கினர் ஸ்ரீ சுவாமிகள். அவரைப் பார்ப்பதே மஹா பாக்யம் தேடுவர் மக்கள், சுவாமிகள் திடீரெனத் தோன்றி அன்பர்களுடன் அளவளாவுவார். சிறிது நேரத்தில் எழுந்து ஓடிவிடுவார்! அன்போடு உணவிட்டால், அன்னத்தைக் கையால் அளைந்துகொண்டேயிருப்பார்; சிறிது உண்பார்; நாலா பக்கமும் அள்ளிச் சிதறுவார்; எழுந்து ஓடிவிடுவார். க்ஷவரத்திலும்; ஸ்நானத்திலும்கூட அப்படியே பாதியில் ஓடிவிடுவார். உண்ணும்போது அருகில் பல தேவதைகள் பலிகேட்பதாகக்கூறி அன்னத்தை இறைத்ததற்கு சிரார்த்த மந்திரங்களில் இருந்து சமாதானம் காட்டுவார். ஸ்ரீ சுவாமிகளின் கையால் அடிபட்டால் தீயகர்மபலன் தீர்ந்து நன்மையுண்டாவதற்கு எத்தனையோ அனுபவங்கள் நிகழ்ந்தன. கடைகளோ; வீடோ எவருடையதாயினும் ஸ்ரீ சுவாமிகள் தடையின்று உள்ளே செல்வர் எதையும் எடுப்பர்; எப்படியும் நடப்பர்; அனைவரும் ஸ்ரீ சுவாமிகளின் மஹிமை உணர்ந்திருந்ததால் யாரும் தடுப்பதில்லை.

"அண்ணாமலையில் மூன்று லிங்கங்கள் உள்ளன. ஒன்று ஜோதிலிங்கம், மற்றொன்று ரமணஸ்வாமி, இன்னொன்று சேஷாத்ரி என்று கூறினர்". ஸ்ரீ சுவாமிகள், ஸ்ரீ ரமண மஹரிஷிகள் ஸ்ரீ சுவாமிகளைவிட 9-வயது இளையவராகையால் "என் தம்பி" என்பார். பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகளே ஒருமுறை ஸ்ரீ சுவாமிகளைப்பற்றி கூறியதாவது:- சேஷாத்திரி சுவாமிகளைப்பற்றி என்னிடம் விசாரிக்கும்போது மக்கள் "பெரிய சேஷாத்திரி எங்கே?

என்றாவது, "உன் அண்ணன் எங்கே?" என்றாவது கேட்பது வழக்கம். அவர் யாரையும் அண்டவிடுவதில்லை. இங்கே யாரும் வருவார்கள்."

ஸ்ரீ ரமண மஹரிஷிகள் இளமையில் பாதாள லிங்கத்து அருகில் உடலுணர்வற்று நிருவிகற்ப சமாதியில் அழுந்தி இருந்த காலத்து நம் சுவாமிகள் துணையாயிருந்து வந்ததோடு முதன்முதல் மக்களிடத்தில் ஸ்ரீ பகவானின் இருப்பைப்பற்றி "இதோ, உள்ளே சின்ன சுவாமி ஒன்று இருக்கிறது! போய்ப் பார்!!" என்று அறிவித்தனர். சமகாலத்தில் திருவண்ணாமலையில் விளங்கிய இந்த இரண்டு ஞானிகளிடையே திகழ்ந்த ஆத்ம உறவின் மேன்மையை எழுதிற் பெருகும். ஒரே காலத்தில் அண்ணாமலையில் இப்பரம ஞானிகள் இருவரையும் தரிசிக்கும் பாக்யம் பெற்றவர் அனேகர்.

சுமார் 40-ஆண்டுகள் இவ்வண்ணாமலை மண்ணை ஆன்ம விண்ணாக்கி உலவி, ஜீவகோடிகளை அனுக்ரஹித்து, ஸச்சிதானந்த பரப்ரம்மமாய் விளங்கி, ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் விபவஹு மார்கழிமீ 21உ வெள்ளிக்கிழமை 4—1—1929 அன்று தூலத் திருவுருநீத்து விதேக[illegible] முற்றனர். ஸ்ரீ சுவாமிகளது திருமேனி ஸர்வாலங்காரத்துடன் ஆயிரக்கணக்கான பக்தர்கள் புடைசூழ எடுத்துச்செல்லப்பட்டு, திருவண்ணாமலை, அக்னிதீர்த்தத்தின் மேற்குக்கரையில் விதிப்படி சமாதி செய்யப்பட்டது. பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகளும் அவ்வமயம் சுமார் ஒருமணி நேரம் அங்கு எழுந்தருளியிருந்தனர். அப்புனித ஸ்தானம் ஸ்ரீ சுவாமிகளின் பூர்ணானுக்ரஹ விலாசத்துடன் இன்றும் "ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் ஆச்ரமம்" என்னும் ஸந்நிதியாக விளங்கிக்கொண்டு இருக்கிறது.

அன்பர்கள் தரிசித்து அருள் பெருக!

பாஸ்கராசார்ய. அருணாசலம்

ஸ்ரீ சேஷாத்ரி ஆச்ரமம்; திருவண்ணாமலை




இனாம் அன்பளிப்பு: டாக்டர் M. சீனுவாசன்,

அசலியம்மன்கோவில் தெரு, திருவருணை

கார்த்திகேயன் அச்சகம், திருவண்ணாமலை. 8-60. 2000